Publisher
**MOULANA MUFTI**
**SHAKEEL AHMED**
**NAQSHBANDI**
**Chennai, Tamil Nadu, India.**
**Mobile :+91-9444453232**
**E-mail : shakeel.naqshbandi@yahoo.com**

شَجَرَةٌ طَيِّبَةٌ

**ஷஜரயே தய்யிபா**
**மற்றும்**
**சில்சிலா நக்ஷ்பந்தியா**
**முஜத்திதிய்ய ஆலியாவின்**

# அன்றாட அமல்கள்

தொகுப்பு

ஹஜ்ரத் மௌலானா
**பீர் துல்ஃபிகார் அஹ்மத்**
நக்ஷ்பந்தி முஜத்தித் தாமத் பரகாதுஹும்

வெளியீடு
(முஃப்தி)
**ஷகீல் அஹ்மத்**
நக்ஷ்பந்தி முஜத்தித்

# مشائخ نقشبند ارجمند

| | |
|---|---|
| 1۔رحمۃللعالمین حضرت نبی کریم ﷺ | مدینہ منورہ |
| 2۔سیدابوبکرصدیقؓ | مدینہ منورہ |
| 3۔حضرت سلمان فارسیؓ | مدائین |
| 4۔حضرت امام قاسم بن محمد بن ابی بکرؒ | مدینہ منورہ |
| 5۔حضرت امام جعفرصادقؒ | مدینہ منورہ |
| 6۔حضرت خواجہ بایزید بسطامیؒ | بسطام |
| 7۔حضرت خواجہ ابوالحسن خرقانیؒ | خرقان |
| 8۔حضرت خواجہ ابوالقاسم گورگانیؒ | جرجان |
| 9۔حضرت خواجہ بوعلی فارمدیؒ | مشہد |
| 10۔حضرت خواجہ یوسف ہمدانیؒ | ترکستان |
| 11۔حضرت خواجہ عبدالخالق غجدوانیؒ | بخارا |
| 12۔حضرت خواجہ محمد عارف دیوگری | تاجکستان |
| 13۔حضرت خواجہ محمود انجیرفغنویؒ | بخارا |
| 14۔حضرت خواجہ عزیزان علی رامیتنیؒ | بخارا |
| 15۔حضرت خواجہ محمد باباسماسیؒ | بخارا |
| 16۔حضرت خواجہ سیدامیرکلال | بخارا |
| 17۔حضرت خواجہ بہاؤالدین نقشبندی بخاریؒ | بخارا |
| 18۔حضرت خواجہ علاؤالدین عطارؒ | حصار |
| 19۔حضرت خواجہ یعقوب چرخیؒ | دوشنبے |
| 20۔حضرت خواجہ عبداللہ احرارؒ | سمرقند |

| | |
|---|---|
| 21۔حضرت خواجہ محمد زاہدؒ | حصار |
| 22۔حضرت خواجہ درویش محمدؒ | شہرسبز |
| 23۔حضرت خواجہ محمد امکنگیؒ | بخارا |
| 24۔حضرت خواجہ محمد باقی باللہؒ | دہلی |
| 25۔حضرت خواجہ مجددالف ثانیؒ | سرہندشریف |
| 26۔حضرت خواجہ محمد معصومؒ | سرہندشریف |
| 27۔حضرت خواجہ سیف الدینؒ | سرہندشریف |
| 28۔حضرت خواجہ حافظ محمد محسنؒ | دہلی |
| 29۔حضرت خواجہ سید نور محمد بدایونیؒ | دہلی |
| 30۔حضرت خواجہ مظہر جان جاناںؒ | دہلی |
| 31۔حضرت خواجہ غلام علی مجددیؒ | دہلی |
| 32۔حضرت خواجہ شاہ ابوسعیدؒ | دہلی |
| 33۔حضرت خواجہ شاہ احمد سعید دہلویؒ | مدینہ منورہ |
| 34۔حضرت خواجہ دوست محمد قندھاریؒ | موسیٰ زئی |
| 35۔حضرت خواجہ محمد عثمان داماںیؒ | موسیٰ زئی |
| 36۔حضرت خواجہ سراج الدینؒ | موسیٰ زئی |
| 37۔حضرت خواجہ محمد فضل علی قریشیؒ | مسکین پور |
| 38۔حضرت خواجہ عبدالمالک صدیقیؒ | خانیوال |
| 39۔مرشد عالم حضرت غلام حبیبؒ | چکوال |
| 40۔حضرت پیر حافظ ذوالفقار احمد نقشبندی مجددی | جھنگ |

# شَجَرَةٌ طَيِّبَةٌ

## ஷஜரயே தய்யிபா
## மற்றும்
## சில்சிலா நக்ஷ்பந்தியா
## முஜத்திதிய்ய ஆலியாவின்

# அன்றாட
# அமல்கள்

தொகுப்பு

ஹஜ்ரத் மௌலானா

**பீர் துல்ஃபிகார் அஹ்மத்**

நக்ஷ்பந்தி முஜத்திதீ தாமத் பரகாதுஹும்

# شَجَرَةٌ طَيِّبَةٌ

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

الحمد لله نحمده ونستعينه ونستغفره ونؤمن به ونتوكل ونعوذ بالله من شرور انفسنا ومن سيئات اعمالنا من يهده الله فلا مضل له ومن يضلله فلا هادى له ونشهد ان لا اله الا الله ونشهد ان سيدنا ومولانا محمدا عبده رسوله اما بعد

உலகத்தில் வாழும் ஒவ்வொரு மனிதனும் நிம்மதியாக வாழ விரும்புகின்றான். அதற்காக இரவும், பகலுமாக உழைப்பு செய்து கொண்டு வருகின்றான். அதனை தனது வாழ்வின் வெற்றி, தோல்விக்கான அடிக்கல்லாக நாட்டுகின்றான். இன்றைய நவநாகரீக காலத்தின் பொருட்களின் முன்னேற்றம் மனித உடலிற்கான சுகங்களை அடைந்து கொள்வதற்கான காரணிகளை இலகுவாக்கிவிட்டது. அதே நேரத்தில் மனிதனின் ஆத்மீகம் மற்றும் மனநிம்மதியை முற்றிலும் தூரமாக்கி விட்டது.



எனவே, மன நிம்மதி எனும் மாபெரும் அருட்கொடையை பெறுவதற்காக அல்லாஹு தஆலாவின் திக்ரை செய்வது மிகவும் அவசியமானதாக உள்ளது.

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :-

أَلَا بِذِكْرِ اللهِ تَطْمَئِنُّ الْقُلُوْبُ

அறிந்து கொள்ளுங்கள், அல்லாஹ்வை திக்ரு செய்வதினால் தான் இதயங்கள் அமைதி பெறுகின்றன (அர்-ரஃது: 28)

کتنی تسکین ہے وابستہ تیرے نام کے ساتھ
نیند کانٹوں پہ بھی آجاتی ہے آرام کے ساتھ

உனது திருநாமத்தில் எத்துணை நிம்மதி உள்ளது ! (உன்னை நினைவு கூர்வதினால்) முட்களின் மீதும் நிம்மதியான உறக்கம் வந்து விடுகின்றது

“திக்ர்” எனும் சொல்லில் மிகவும் விரிவான பொருட்கள் பொதிந்துள்ளன. இது அல்லாஹுதஆலாவை நினைவு கூறுவதற்கும், அவனது சொல்லான திருக்குர்ஆனிற்கும் கூறப்படுகின்றது - இச்சிறு நூலில் திக்ரைக் கொண்டு நமது நோக்கம் அல்லாஹுத்தஆலாவை நினைவு கூறுவதாகும். அதன் அவசியத்தைப் பற்றி திருக்குர்ஆனும், நபி மொழிகளும் தெளிவுபடுத்துகின்றன. “சான்றுக்கு ஒரு பிடி அரிசி போதும்”

என்ற முதுமொழிக்கேற்ப திக்ரின் சிறப்புகளில் சிலவற்றை காணுவோம்.

① எவரொருவர் அல்லாஹுத்தஆலாவை பணிவுடன் நினைவு கூறுகின்றாரோ, அவரை அல்லாஹுதஆலா பாவ மன்னிப்புடன் நினைவு கூறுகின்றான்.

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :-

فَاذْكُرُونِي أَذْكُرْكُمْ

என்னை நீங்கள் நினைவு கூறுங்கள்; உங்களை நான் நினைவு கூறுகிறேன் (அல்பகரா: 152)

எனவே, எவரொருவர் திக்ரு செய்வதில் நிலைத்திருப்பாரோ அல்லாஹுதஆலா அவருக்கு புதிய புதிய அமல்களை செய்யும் பாக்கியத்தை நல்குவான்.

(2) தொழுகையின் அசலான நோக்கமும் அல்லாஹுதஆலாவை நினைவு கூறுவதாகும்.

அல்லாஹுதஆலா கூறுகின்றான்:-

أَقِمِ الصَّلٰوةَ لِذِكْرِي

(என்னை நினைவு கூறுவதற்காக வேண்டி தொழுகையை நிலை நாட்டுவீராக!)

நபி மொழியின் கருத்து,

எந்த தொழுகையில் அல்லாஹுதஆலாவின் பால் கவனம் இல்லையோ, அது தொழுகையாக இருப்பது கிடையாது



என்பதாகும். எனவே, தொழுகையை நிறைவேற்ற பிரசன்னமாவதும் அவசியம். அதே நேரத்தில் மனதை ஓர்மைபடுத்துவதும் அவசியமாகும்.

(3) தஃவத் இலல்லாஹ் - அல்லாஹுதஆலாவின் பால் அழைக்கும் பாதையில் திக்ரு செய்வது ஆரம்ப முதல் இறுதி வரை உதவி புரிகின்றது. அல்லாஹுதஆலா ஹழ்ரத் மூஸா (அலைஹிஸ்ஸலாம்) மற்றும் ஹழ்ரத் ஹாரூன் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை நபித்துவத்தை அருளி பிர்அவ்னின் பால் அனுப்பும் சமயம் சில அறிவுரைகளை வழங்கினான். அதில் ஒன்று, "நீங்கள் என்னை நினைவு கூறுவதை விட்டு மறதியில் இருந்து விட வேண்டாம்." என்பதாகும்.

அல்லாஹுதஆலா கூறுகின்றான்:

اِذْهَبْ أَنْتَ وَاَخُوْكَ بِآيٰتِيْ وَلَا تَنِيَا فِيْ ذِكْرِيْ

நீரும், உம்முடைய சகோதரரும் என்னுடைய அத்தாட்சிகளைக் கொண்டு (மக்களிடம்) செல்லுங்கள். நீங்கள் என்னை திக்ரு செய்வதில் நீங்கள் இருவரும் சோர்வடைந்து விடவேண்டாம். (தாஹா: 42)

தஃவத் இலல்லாஹ் - அல்லாஹுதஆலாவின் பால் அழைப்பு விடுக்கும் இறுதியில் போர் புரியும் நிலையும் ஏற்படுகின்றது. அதுசமயம் அல்லாஹுதஆலா ஈமான் கொண்ட முஃமினீன்களுக்கு, மூர்க்கமாக போர் புரியும் நிலையிலும் என்னை நினைவு கூற வேண்டும், அவ்வாறு செய்தால் வெற்றி

உங்களது பாதங்களை முத்தமிடும் என பணிக்கின்றான்.

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :

يَاأَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا إِذَا لَقِيْتُمْ فِئَةً فَاثْبُتُوا

وَاذْكُرُوا اللهَ كَثِيْرًا لَعَلَّكُمْ تُفْلِحُوْنَ*

முஃமின்களே! நீங்கள் (போரில் எதிரிகளின்) கூட்டத்தைச் சந்தித்தால் உறுதியாக இருங்கள். நீங்கள் வெற்றியாளர்களாகும் பொருட்டு அல்லாஹ்வை அதிகமாக திக்ரு செய்யுங்கள். (அன்ஃபால் : 45)

(4) உலக நியதி என்னவெனில் மனிதன் தனது எதிரியின் மீது ஆதிக்கம் கொள்ளும் பொழுது முதன் முதலாக அவன் அவனது உயிரை கொல்லும் பயங்கரமான ஆயுதங்களை கைப்பற்றி கொள்கின்றான். அதைப் போன்று ஷைத்தான் மனிதனின் மீது ஆதிக்கம் கொள்ளும்பொழுது அவனை அல்லாஹுதஆலாவின் திக்ரைவிட்டு மறதியில் ஆழ்த்திவிடுகின்றான் :

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :

اسْتَحْوَذَ عَلَيْهِمُ الشَّيْطَانُ فَأَنْسَهُمْ ذِكْرَ اللهِ

ஷைத்தான் அவர்கள் மீது வெற்றி கொண்டு, அல்லாஹ்வைப் பற்றிய நினைவையும் அவர்களுக்கு மறக்கச் செய்துவிட்டான்.



(5) திக்ரு செய்வது முஃமினின் ஆயுதமாகும். அதைக் கொண்டு தான் ஷைத்தானுடைய தாக்குதல்களைவிட்டு தப்பிக்க முடியும்.

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :

اِنَّ الَّذِيْنَ اتَّقَوْا اِذَا مَسَّهُمْ طَائِفٌ مِّنَ الشَّيْطَانِ

تَذَكَّرُوْا فَاِذَاهُمْ مُبْصِرُوْنَ *

நிச்சயமாக எவர்கள் (அல்லாஹ்வை) அஞ்சுகிறார்களோ அவர்களை, ஷைத்தானிலிருந்து ஓர் ஊசலாட்டம் (தவறுதலான சிந்தனை) தொட்டு விடுமானால், (உடனே அல்லாஹ்வை) அவர்கள் நினைவு கொள்வார்கள். எனவே, அப்பொழுது அவர்கள் (மெய் நிலையைக் காணும்) அகப்பார்வையாளர்களாக ஆகிவிடுகிறார்கள். (அஃராப் : 201)

(6) திருக்குர்ஆனில் அறிவுடையவர்களின் அடையாளமாக நிற்கும் பொழுதும், உட்காரும் பொழுதும், படுத்தவண்ணமாகவும், நின்ற வண்ணமாகவும் தனது இரட்சகனான அல்லாஹுதஆலாவை நினைவு கூறுகின்றார்கள்.

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :

اَلَّذِيْنَ يَذْكُرُوْنَ اللهَ قِيَامًا وَّقُعُوْدًا وَّ عَلَى

جُنُوْبِكُمْ

அவர்கள் எத்தகையோரென்றால், நின்ற நிலையிலும் இருந்த இருப்பிலும், தங்களின் விலாப்புறங்களின் மீது (படுத்தநிலையிலும்) அல்லாஹ்வை திக்ரு செய்வார்கள்.
(ஆலஇம்ரான் : 191)

(7) இஸ்லாமிய ஷரீஅத்தில் ஒவ்வொரு அமலுக்கும் ஒரு எல்லை சொல்லப்பட்டு உள்ளது, ஆனால், அல்லாஹுதஆலாவை நினைவு கூறுவதில் எந்தவொரு எல்லை நிர்ணயிக்கப்படவில்லை.

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :

يَاأَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا اذْكُرُوا اللهَ ذِكْرًا كَثِيْرًا

முஃமின்களே! அல்லாஹ்வை மிக அதிகமான திக்ராக திக்ரு செய்யுங்கள். (அஹ்ஜாப் : 41)

அதாவது அல்லாஹுதஆலாவை நினைவு கூறுவதில் எந்தளவிற்கு தனது சக்தியை பிரயோகிக்க முடியுமோ அந்தளவிற்கு முயற்சி செய்யுங்கள் என்பதாகும்.

(8) அல்லாஹுதஆலா முஃமின்களுக்கு தத்தமதுள்ளங்களில் தன்னை நினைவு கூறுமாறு பணிக்கின்றான்.

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :

وَاذْكُرْ رَبَّكَ فِيْ نَفْسِكَ

உமது (இறைவனான) ரப்பை உமதுள்ளத்தில் நினைவு கூறுவீராக!

அதாவது தனதுள்ளத்திலும், தனது சிந்தனையிலும்



நினைவு கூறுங்கள் என்பதாகும். மாண்புமிகு சூபியாக்களிடத்தில் இத்தகு நினைவு கூறுவதற்கு "முராகபா" எனப் பெயரிடப்பட்டுள்ளது.

(9) ஷைத்தான் முதலில் அல்லாஹுதஆலாவை நினைவு கூறும் பாதையை விட்டு தடுக்கின்றான், பின்னர் தொழுகையை விட்டும் தூரமாக்கிவிடுகின்றான்.

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :

وَيَصُدَّكُمْ عَنْ ذِكْرِ اللهِ وَعَنِ الصَّلٰوةِ

மேலும், (ஷைத்தான்) அல்லாஹ்வுடைய திக்ரை விட்டும், தொழுகையை விட்டும் உங்களை அவன் தடுக்கின்றான். (அல்மாயிதா : 91)

(10) மனிதன் திக்ரு செய்வதை விட்டு மறதியில் ஆழ்ந்துவிட்டால், அவன் நஷ்டமடைந்தவர்களின் கூட்டத்தில் சேர்ந்துவிடுகின்றான்:

அல்லாஹுதஆலா கூறுகின்றான் :

يَاأَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا لَاتُلْهِكُمْ اَمْوَالُكُمْ وَلَا

اَوْلَادُكُمْ عَنْ ذِكْرِ اللهِ وَمَنْ يَّفْعَلْ ذٰلِكَ فَاُولٰٓئِكَ

هُمُ الْخٰسِرُوْنَ *

முஃமின்களே! உங்களுடைய பொருட்களும், உங்களுடைய மக்களும் அல்லாஹ்றவை (நீங்கள்) நினைவு கூர்வதை விட்டும் உங்களைப் பாராமுகமாக்கி விட வேண்டாம். எவர்கள் இதனைச் செய்கிறாரோ அவர்கள் தாம் நஷ்டவாளர்கள்

(முனாபிகூன் : 9)

திருக்குர்ஆனிலிருந்து எடுத்துச் சொல்லப்பட்ட மேற்கண்ட பத்து பலமான ஆதாரங்கள், நாம் திக்ரை அதிகமதிகமாக செய்ய வேண்டும் என தெளிவுபடுத்துகின்றன.

கிருபையாளனும், மன்னிப்போனுமான

அல்லாஹுத்தஆலாவின் மீது ஆதரவு வைக்கும்

**பகீர் ஜுல்பிகார் அஹ்மத் நக்ஷபந்தி, முஜத்திதி**

كان الله له عوضًا عن كل شيئٍ



معمولات یومیہ سلسلۂ عالیہ نقشبندیہ مجددیہ

اَلْحَمْدُ لِلّٰہِ وَکَفٰی وَسَلَامٌ عَلٰی عِبَادِہِ الَّذِین اصْطَفٰی اَمَّا بعد

# நக்ஷபந்தியா முஜத்திதியா தரீகாவின் அன்றாட அமல்கள்

1. **உகூபே கல்பி** (ஒவ்வொரு நொடியிலும் அல்லாஹு தஆலாவின் சிந்தனை) دست بكار دل بيار “உடல் உலக அலுவல்களில் ஈடுபட்டிருந்தும் உள்ளம் தனது நேசனான அல்லாஹு தஆலாவின் பால் குடி கொண்டுள்ளது.” என்ற கவிக்கேற்ப ஒவ்வொரு நொடியிலும் தனது கவனத்தை அல்லாஹு தஆலாவின் பால் செலுத்திக் கொண்டிருப்பது.

அல்லாஹுதஆலா கூறுகின்றான்: -

فَاذْكُرُوا اللّٰهَ قِيَامًا وَّ قُعُوْدًا وَّعَلٰى جُنُوْبِكُمْ

நின்ற நிலையிலும், இருந்த இருப்பிலும் தங்கள் விலாப் புறங்களில் (சாய்ந்து) இருக்கும் போதும் அல்லாஹ்வை நினைவு கூறுங்கள். (அன்னிஸா: 103)

**2. முராகபா** (அல்லாஹு தஆலாவின் ரஹ்மத்தை எதிர்பார்த்து காத்திருத்தல்)

அனுதினமும் 24 மணி நேரத்திற்கிடையே இருமுறை ½ மணி நேரத்திற்காக உலகம் மற்றும் அதில் இருக்கும் அனைத்தையும் விட்டு அகன்று அல்லாஹுதஆலாவுடன் முழுமையாக ஒன்றித்து, அமர்ந்த வண்ணமாக, "அல்லாஹு தஆலாவின் ரஹ்மத்து இறங்குகின்றது, எனதுள்ளத்தில் குடி புகுகின்றது, என துள்ளத்தில் இருக்கும் பாவங்களின் இருளும், கருமையும் விலகி தூரமாகுகின்றது. மேலும், எனதுள்ளம் நன்றி செலுத்தும் முகமாக اَللّٰه اَللّٰه اَللّٰه எனக் கூறுகின்றது." என்ற எண்ணம் கொள்வது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :-

وَاذْكُرْ رَّبَّكَ فِيْ نَفْسِكَ تَضَرُّعًا وَّخِيْفَةً وَّدُوْنَ



الْجَهْرِ مِنَ الْقَوْلِ بِالْغُدُوِّ وَالْاٰصَالِ

(அல்-அஃறாஃப் : 205)

(நபியே!) நீர் உம் மனதிற்குள் மிக்க பணிவோடும், அச்சத்தோடும் (மெதுவாக) உரத்த சப்தமின்றி காலையிலும், மாலையிலும் உம் இறைவனின் (திருநாமத்தை) திக்ரு செய்து கொண்டு இருப்பீராக

**3. திருக்குர்ஆனை ஓதுவது :** அனுதினமும் ஒரு (ஜுஸ்வு) பாகத்தை ஓதுவது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :-

فَاقْرَءُوْا مَا تَيَسَّرَ مِنَ الْقُرْاٰنِ

நீங்கள் குர்ஆனில் உங்களுக்குச் சுலபமான அளவு ஓதுங்கள். (அல் முஸ்ஸம்மில் : 20)

**4. இஸ்திக்பார்** (பாவ மன்னிப்பு கோருவது): அனுதினமும் காலையிலும், மாலையிலும் நூறு நூறு முறை கீழ்க்காணும் பாவ மன்னிப்பை கேட்பது :

اَسْتَغْفِرُ اللّٰهَ رَبِّيْ مِنْ كُلِّ ذَنْبٍ وَّاَتُوْبُ اِلَيْهِ

அல்லாஹுதஆலா கூறுகின்றான்:

إِسْتَغْفِرُوْا رَبَّكُمْ ثُمَّ تُوبُوْا إِلَيْهِ

நீங்கள் உங்களுடைய இறைவனிடம் பாவமன்னிப்பு கோருங்கள்; இன்னும் (தவ்பா செய்து) அவன் பக்கமே மீளுங்கள். (ஹூது:52)

## 5.நபிகளாரின் மீது ஸலாத்து கூறுவது :

அனுதினமும் காலையிலும், மாலையிலும் நூறு நூறு முறை அல்லாஹு தஆலாவின் தூதர் நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மீது கீழ்க்காணும் ஸலாத்தை கூறுவது:

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى آلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

அல்லாஹு தஆலா கூறுகின்றான்:

يَاَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا صَلُّوا عَلَيْهِ وَسَلِّمُوْا تَسْلِيْمًا*

ஈமான் கொண்ட விசுவாசிகளே! நீங்களும் அவர் மீது



ஸலவாத்துச் சொல்லி அவர் மீது ஸலாமும் சொல்லுங்கள். (அல்-அஹ்ஜாப்:56)

## 6.ஆத்மீக ஆசானான தனது ஷேக் அவர்களுடன் தொடர்பு கொண்டிருப்பது:

அல்லாஹுதஆலாவின் மகத்துவமிக்க தீனை கற்பது மற்றும் தர்பியத்து எனும் ஆத்மீக பயிற்சி பெற தனது ஆத்மீக ஆசானான ஷேக் அவர்களுடன் கடிதத் தொடர்பு அல்லது தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டிருப்பது. மேலும், எப்பொழுதேனும் சமய சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் ஷேகு அவர்களின் சகவாசத்தில் நேரத்தை கழிப்பது.

அல்லாஹுதஆலா கூறுகின்றான்:

إِتَّقُوا اللّٰهَ وَكُوْنُوْا مَعَ الصَّادِقِيْنَ *

அல்லாஹ்வைக் கொண்டு பயந்து கொள்ளுங்கள், மேலும் உண்மையாளர்களுடன் இணைந்திருங்கள்.

SHAKEEL AHMED NAQSHBANDI
Chennai. Tamil Nadu. India.
Mobile : +91-9444453232
E-mail: shakeel.naqshbandi@yahoo.com

## ختمات شریفہ خواجگان قدس اللہ اسرارھم

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِکْ وَسَلِّمْ

| | |
|---|---|
| ختم حضرت شیخ عبدالقادر جیلانیؒ | حَسْبُنَا اللّٰهُ وَنِعْمَ الْوَكِيْلُ |
| ختم حضرت خواجہ بہاؤالدینؒ | يَا خَفِيُّ الُّطْفِ اَدْرِكْنِىْ بِلُطْفِکَ الْخَفِيِّ |
| ختم امام ربانی حضرت مجدد الف ثانیؒ | لَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ |
| ختم عروۃ الوثقیٰ حضرت خواجہ محمد معصومؒ | لَا اِلٰهَ اِلَّا اَنْتَ سُبْحٰنَکَ اِنِّیْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ |
| ختم حضرت مرزا مظہر جان جاناں شہیدؒ | يَا حَيُّ يَا قَيُّوْمُ بِرَحْمَتِکَ اَسْتَغِيْثُ |
| ختم حضرت خواجہ محمد فضل علی قریشیؒ | وَاللّٰهُ ذُوْ فَضْلٍ عَلَى الْمُؤْمِنِيْنَ |
| ختم امام العلماء والصلحاء حضرت خواجہ محمد عبدالمالک صدیقیؒ | اِنَّا لِلّٰهِ وَاِنَّا اِلَيْهِ رَاجِعُوْنَ |
| ختم مرشد عالم محبوب العارفین حضرت خواجہ پیر غلام حبیب نقشبندیؒ | اَللّٰهُ وَلِيُّ الَّذِيْنَ اٰمَنُوْا |
| محبوب العلماء والصلحاء حضرت پیر ذو الفقار احمد نقشبندی مجددی مدظلہم | وَاللّٰهُ وَلِيُّ الْمُؤْمِنِيْنَ |